egistered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 3

ACC. NO. 33781

# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கட னடியேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | சார்வரி பங்குனி 1961 மார்ச் | இதழ் 3

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# செய்திச் சுருக்கங்கள்

சித்தாந்தக் கோடை வகுப்பு :—முன் சில ஆண்டுகளில் சைவ சித்தாந்த யுகா சமாஜம் சித்தாந்தக் கோடை வகுப்பு நடத்திவந்துள்ளது. அதுபோல் வரும் 1961 மே மாதத்தில் தகுந்த இடத்தில் ஏற்பாடு செய்தால் நலமெனக் கருதப் படுகிறது. சுமார் ஒருவாரம் நடைபெறலாம். முக்கியமாக மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் பயன் படவேண்டும். மற்றையோர்களுக்கும் உதவியாயிருக்கும். கோடை வகுப்புக்கு வசதிகள் செய்து கொடுக்க விரும்புபவர்களும், வகுப்புகளிற் கலந்துகொள்ள விரும்புபவர்களும் சமாஜச் செயலருக்கு எப்ரல் 10-ம் தேதிக்குள் எழுதவும்.

இரங்கற் கூட்டம் : சமாஜப் பேரன்பரும், திருத்தொண்டர் புராண பேருரை ஆசிரியருமான கோவை-சிவக்கவிமணி - சி. கே சுப்பிரமணிய முதலியார் (சம்பந்த சரணலயத் தம்பிரான்) இறைவன் திருவடி நீழல் அடைந்ததை முன்னிட்டுச் சமாஜத்தின் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவிக்கும் பொருட்டு 11-2-61 மாலை 6 மணிக்கு ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் இரங்கற்கூட்டம் கூடிற்று. அறநிலையத்துறை ஆணையர் திரு. அ. உத்தண்டராமன், ஐ.ஏ.எஸ். அவர்கள் தலைமை வகித்தார்கள். திருவாளர்கள் - அ. சோமசுந்தரம் செட்டியார், எம்.ஏ., ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ.,எல்.டி., நல். முருகேச முதலியார், பி.ஏ., கயப்பாக்கம் - சோமசுந்தரம் செட்டியார், மதுரை - கருப்பையா முதலியோர் உரை நிகழ்த்தினர்.

மணிவிழா : சமாஜச் செயலர் திரு. ஜி. கலியாணம் அவர்களின் தமையனாரும், மாயூரம் தவத்திரு - யோக அபிராமி அம்மையார் மடம், தண்டபாணி சுவாமி மலைக் கோயில் இவைகளின் தருமகர்த்தருமான திரு. ஜி. அண்ணாமலைப் பிள்ளையவர்களுக்கு மாயூரத்தில் மேற்படி கோயில் சந்நிதியில் அறுபதாண்டு நிறைவு விழா 28-2-61-ல் நடந்தது. காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சாரிய சுவாமிகளும், தருமை ஆதீனம் கயிலைக் குரு மகா சந்நிதானம் அவர்களும், ஆசிச்செய்தி அனுப்பியிருந்தார்கள். தருமை ஆதீனக் கல்லூரி முதல்வர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் வாழ்த்துப்பாக் கலை வாசித்தளித்தார்கள். மாலையில் வரவேற்பும், தண்டபாணி சுவாமி கோவிலில் வழிபாடும் நடைபெற்றன.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானியையுள் நாடு

மலர் 34 | சார்வரி பங்குனி 1961 மார்ச் | இதழ் 3

## "நல்லார் வணங்கப் படுவான்"

(முருகவேள்)

நீலகேசி :

" நல்லார் வணங்கப் படுவான் " என்னும் இச் சொற்றொடர், ஒரு பாடலின் தொடக்கக் குறிப்பு ஆகும். அப்பாடல் நீலகேசி என்னும் நூலின் முதற் பாடலாக வருகின்றது. நீலகேசி என்பது தமிழில் 'ஐஞ்சிறு காப்பியங்கள்' என வழங்கப் படுவனவற்றுள் ஒன்று. ஐஞ்சிறு காப்பியங்களாவன: நீலகேசி, சூளாமணி, உதயணன்கதை, யசோதரகாவியம், நாககுமார காவியம் என்பன: நீலகேசி ஒரு சமண சமய நூல். அது தமிழில் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருக விளங்கியிருந்து மறைந்துபோன குண்டலகேசி என்னும் பௌத்த சமய நூலுக்கு எதிர்நூலாக எழுந்ததென்பர்.

" நல்லார் வணங்கப் படுவான்; பிறப்பாதி நான்கும்
இல்லான்; உயிர்கட்கு இடர்தீர்த்து உயர்இன்பம் ஆக்கும்
சொல்லான்; தருமச் சுடரான்எனும் தொன்மையினன்;
எல்லாம் உணர்ந்தான்! அவனே இறையாக ஏத்தி!"

என வரும் அருகன் துதியோடு நீலகேசி தொடங்குகின்றது. இந்நூலுக்கு 14-ஆம் நூற்ருண்டைச் சேர்ந்தவர் எனக் கருதப்படும் சமய திவாகர வாமன முனிவர் என்பார் சிறந்ததோர் உரையினைத் திறம்பட இயற்றியுள்ளார். நுண்மாண் நுழைபுலம் மிக்க அவ்வுரையாசிரியர், நீலகேசியின் முதற் பாடலாகவரும் இச் செய்யுளுக்கு விரிவானதோர்

உரை எழுதியுள்ளார். அதிலும், 'நல்லார் வணங்கப் படுவான்' என்னும் தொடர் குறித்து வரைந்துள்ள சிறந்த உரைப் பகுதிகள், மிகவும் சுவைபொருந்தித் திகழ்கின்றன. 'நல்லார் வணங்கப் படுவான்' அருகனே யன்றிப் புத்தன் அல்லன் என்பதனை, அவ்வுரையாசிரியர் பெரிதும் வற் புறுத்தி எழுதிச் செல்லுகின்றார். புத்தர்பிரான் பலவகைக் குற்றங்களை யுடையவர் எனவும், அக்குற்றங்கள் ஒன்றும் இல்லாதவர் தமது சமயக் கடவுளாகிய அருகதேவன் ஒருவரே எனவும் அவர் எழுதிச் செல்லுந்திறம் வியப்பை விளைப்பதோடு, அவர்தம் வழக்கீட்டு நெறியின் வன்மை யினையும் நன்கினிது புலப்படுத்தி, ஒருவகை மகிழ்ச்சி யுணர் வினை எழுப்புகின்றது. அவருரையின் சிறந்த பகுதிகளை மட்டும் ஈண்டு அகழ்ந்தெடுத்துச் சுருங்கத் தொகுத்துக் காண்போம் :

நீலகேசி உரைப்பகுதி :

" இனி, நல்லார் வணங்கப்படுதல் முதலாயின சுகதன் (புத்தன்) முதலாயினார்க்கு எய்தாதாயினன்றே, அர்ஹத் பரமேஷ்டிக்கு மங்கலமாவது? அஃதென்னை பெற்றவா றெனின், குற்றமில்லாதாரையன்றே நல்லார் வணங்குவது! ஹிம்ஸையும் அசத்தியமும் ஸ்தேயமும் காமமும் த்ரஷ்ணை யும் முதலாயின குற்றங்கள் சுகதன் முதலாயினார்க் குண் மையின், அவர் நல்லார் வணங்கப்படார் என்பது.

சுகதனுக்குக் கொலை முதலாயின எங்ஙனம் உளவா கின்றன? எனில், ஆத்ம வதத்தாலும் மாம்ச பட்சணத் தாலும் கொலையுண்டென்பது......பஞ்ச அங்கமும் கூடிற் கொலையாம், அன்றெனில் ஆகாது என்றுபதேசித்தலாலும் சுகதனுக்குக் கொலையுண்டென்பது.

இனி, அசத்திய கதனமும் (பொய் பேசுதலும்) சுகத னுக்கு உண்டு; புண்ணிய பாபங்கள் செய்தவன் தத்க்ஷ ணத்தே நசிக்கின்றானாதலால், தத்பலங்கள் பெறான் என்ப தறிந்தும், இன்ன புண்ணியஞ் செய்தான் இன்ன பலன் பெறும், இன்ன பாபஞ் செய்தான் இன்ன பலன்பெறும் என்று சொல்கின்றானாதலால்......

இனி, சுகதனுக்குக் களவும் உண்டு; குடையும் செருப்பும் முதலாயின ஒரு காலத்துத் தானம்பெற்றுப்

பிறிதொரு காலத்து அவற்றை என்னுடையன என்று பற்றுமாதலால்......ஆதலிற் களவுண்டென்பது.

இனி, சுகதனுக்குக் காம சேவையும் உண்டு; இவனுக்குத் தாரமும் புத்திரரும் உண்மை பெறப்படுதலின் என்பது.

இனி, சுகதனுக்குத் த்ரஷ்ணையும் (ஆசையும்) உண்டு. மாம்ஸம் பட்சித்தலும், தாம்பூல ஸேவையும், பல்லுத் துடைத்தலும், ஸ்நானபானங்களும், குடை செருப்பு முதலாயின கைக்கோடலும் த்ரஷ்ணையொழியக் கூடாமையின் என்பது.

இனி, இவன் காமபரவசனுமாம்; உறக்கத்தான் மயங்குதலும், பசியால் வருந்தி நாடோறும் பிட்சை யிரத்தலும் உண்மையின் என்பது.

இனி, இவன் பொருள் இருந்தவாறு (த்த்துவஞானம்) அறியானுமாம்; என்னை? பதார்த்தங்கள் நிரம்சமாய் க்ஷணத்திற் கெடும் என்று சொன்னவன்தானே, முன்பு நான் முயலாய்ப் பிறந்து தர்மோபதேசம் பண்ணினேன்; இப்பொழுது புத்தன் ஆயினேன் என்று ஆகமோபதேசம் பண்ணினன் ஆதலால். இக்கொலை முதலாயின, இழுக்குத் தலைவரும் என்று தவிர்ந்தான் அல்லன்; உலகம் தவிர்தலில் தவிர்ந்தான் என்றமையானும் பெறுதும்.

இனி, உயிர்கட்கு இடர்தீர்த்து உயர் இன்பம் ஆக்கும் சொல்லுடைமையும் பிறர்க்கு இல்லை; அவர்கள் உயிர்கட்கு இடர் ஆக்கும் சொல்லினர் ஆதலால். என்னையெனின், சுகதன் புண்ணிய பாபங்களைச் செய்தார்க்குத் தத்பல போக்த்ருத்துவம் இல்லை என்பது அறிந்தும், புண்ணியம் செய்மின் பாபம் ஒழிமின் என்று உபதேசித்து உயிர்களைக் கிலேசிப்பிக்கின்ருன் ஆதலானும்; ஐந்தங்களிற் குறையக் கொன்ருர்க்குக் கொலையில்லை என்றும், மாம்ஸம் தின்பார்க்குக் கொலையில்லை என்றும் கொலைமேற் புரிவித்தும், காற்பொன்னிற் ருழ்ந்தது களவன்று என்று களவின்மேற் புரிவித்தும், எண் மாத்திரை வைக்கிற் காமமன்று என்று காமத்தின்மேற் புரிவித்தும், கள் என்னும் உள்ளமின்றிக் கட்குடித்தார்க்குக் குற்றமில்லை என்று மகாயானம் மந்திர யானங்கள் சொல்லிக் கட்குடிப்பித்தும், பிறன் பொய் என்று அறியாமற் சொல்லும் பொய்

பொய்யன்று என்று பொய்மேற் புரிவித்தும், மற்றும் பல பிரகாரத்தாலும் சர்வ ஜீவன்களையும் இகபர லோகத்துத் துன்புறுவிக்கின்றான் ஆதலாலும்; மகௌஷத பண்டிதனை ஜாதகத்துத் தான் ஒரு ராஜாவுக்கு மந்திரியாய்ப் பிரதிபட்சத்து இராஜாக்களை வஞ்சித்தும், ஸ்திரீயையும் பிள்ளைகளையும் பிறர்க்குக் கொடுத்துப் பீடித்தும், பிறவாற்றானும் உயிர்களைத் துன்புறுவிக்கின்றமையின், உயிர்கட்கு இடர் ஆக்கும் சொல்லான் என்பது பெறுதும்.

இனி, எல்லாம் உணர்தலும் சுகதாதிகட்குக் கூடாதாம். சுகதன் க்ஷணந்தோறும் கெடுகின்றானாதலால், தான் உளன் ஆகிய ஏக க்ஷணத்திலுள்ள ஒன்றையும் அறிவதல்லது பிற அறியானும்......அன்றியும், பௌத்தரால் சுகதன் சர்வக்ஞன் அல்லன் என்பது சொல்லவும் பட்டது........"

**சம்பந்தரின் சமயப் பொறை:**

இங்ஙனம் சமண சமய நூலாகிய நீலகேசி பௌத்தர்களைப் பழித்துரைக்குமாறு போல, பௌத்த சமய நூலாகிய மணிமேகலையின்கண் சமணர்களைப் பழித்துரைக்கும் குறிப்புக்கள் உள்ளமை காணலாம்......செந்தமிழ்ச் சிவநெறித் தலைவராகிய நமது அருமைத் திருஞானசம்பந்தப் பெருமானைச் சமயப்பொறை இல்லாதவர் எனக் கூறி இகழ்ந்துரைக்கும் ஒரு சிலர், சமண பௌத்தர்களே 'சுந்தோப சுந்தர்கள்' போலத் தம்முள் இங்ஙனம் ஒருவரோடு ஒருவர் இகலிப் பொருதுகொண்ட திறங்களை அறிந்து கருதி, உண்மையுணரற்பாலராவர்.

---

# பிரபஞ்சத் தோற்றமும் ஈறும்- சித்தாந்தமும் நவீன ஆராய்ச்சியும்

(நல். முருகேச முதலியார், பி.ஏ.)

சென்ற மாதம் இங்கிலாந்தில் கேம்பிரிட்ஜைச் சார்ந்த ஆறு மேல்நாட்டு விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் பிரபஞ்ச உற்பத்தியைப்பற்றி ஒரு புத உண்மையை முடிவு கட்டினதாக உலகிற்குப் பத்திரிகைகள் வாயிலாக விளம்பரம் செய்

துள்ளார்கள் (ஹிந்து 11-2-61 இதழ் பார்க்க). அவர்களின் தலைவர் பேராசிரியர் மார்ட்டின் ரைலி என்பவர். அவருடன் சேர்ந்து வேலை செய்பவர்கள் ஐவர்; அவர்களில் ஒருவர் ஒரு மாது. அவர்கள் கேம்பிரிட்ஜிலுள்ள முல்லார்டு ரேடியோ வான ஆராய்ச்சி நிலையத்தில் கருவிகளின் உதவிகொண்டு பிரபஞ்சத்தின் ஆயுள், அண்டங்களின் தூரம் முதலியவைகளைப்பற்றி ஆராய்ச்சிசெய்து வருகிறார்கள். அவர்களின் முக்கிய முடிவு என்னவெனின் பிரபஞ்சம் அனாதியன்று, அது ஒரு காலத்தில் தோன்றியதே என்பதாகும். அந்த முடிவு கீழ்க்கண்ட நான்கு பிரத்தியக்ஷப் பிரமாணங்களின் துணிபு எனக் கூறுகிறார்கள் :—

(1) பிரபஞ்சம் விருத்தியடைந்துகொண்டே இருக்கிறது.

(2) பூமண்டலமானது பல மண்டலங்களில் ஒரு சிறு துளி. அடிப்படையான பிரகிருதி (மேட்டர்) வானவெளியில் அளவற்ற வேகத்தில் சென்றுகொண்டிருக்கிறது.

(3) பிரபஞ்சம் ஏதோ ஒரு காலத்தில் தோன்றியதே.

(4) பிரபஞ்சம் ஏதோ ஒரு காலத்தில் முடிவடைய வேண்டியதே.

மேற்கூறிய கொள்கைகள் பேராசிரியர் பிரெட் ஹாயில் போன்ற ஆராய்ச்சியாளர்கள் இதுவரையில் நிறுவிய கொள்கைக்கு மாறானவை. ஹாயிலின் கூற்று பிரபஞ்சம் ஏகதேசமாக கிலவர நிலையில்தான் இருக்கிறது. ஆனால் இடைவிடாது ஜலவாயு அணுக்களினின்று புது விண்மீன்கள் உண்டாகிக் கொண்டிருக்கின்றன என்பதாகும்.

மேற்கூறிய அறுவர் பிரபஞ்சமானது சுமார் 80,000 லக்ஷம் ஒளி ஆண்டுகள் தூரம் வியாபகமுடையது, சுமார் 80,000 லக்ஷம் ஆண்டுகள் பழைமையானது என்று வான சாஸ்திரக் கருவிகள்கொண்டுகண்கூடாகக் கண்ட உண்மைகளினின்று ஊகிக்க வேண்டியது என்கிறார்கள். இன்னும் தூரத்திலுள்ள அண்டங்கள் பருமன் அதிகமானவையென்றும், சமீபத்திலுள்ளவை அதைவிடப்பருமன்குறைவு என்றும் கூறுவர். பிரபஞ்சம் சுமார் 100000 லக்ஷம் ஆண்டுகள் இருந்தும் அது மாறிக்கொண்டே இருக்கிறது. அதற்கு அந்தம் நிச்சயம் உண்டு என்பதுதான் அவர்களின்

முக்கிய முடிவு. எப்போதுதான் பிரபஞ்சம் முடிவடையும் என்ற கேள்விக்கு விடை யாராலும் சொல்லமுடியாது. பல கோடி வருஷங்கள் ஆகலாம் என்று பேராசிரியர் ரைலி சொல்லுகிறார். பின்னும் பைபிளில் கூறியுள்ள பிரபஞ்சத் தோற்ற வரலாற்றுக்கும், தங்கள் கொள்கைகளுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

ரைலி கோஷ்டியாரின் துணிபு சைவ சித்தாந்தத்தில் உலகுக்கு மூலிகைமை கூறியுள்ள உண்மைக்குச் சற்று உடன்பாடா யிருக்கிறது. நவீன பிரத்தியக்ஷப் பிரமாணங்களால் இவர்கள் கூறுவதை, பிரத்தியக்ஷ, அநுமான ஆகமப் பிரமாணங்களால் சைவ சித்தாந்தம் முன்பேயே முடிவு கட்டியுள்ளது. சைவ சித்தாந்தம் விஞ்ஞானத்துக்கு முரண்பாடில்லை யென்பது ஈண்டுக் கவனிக்கத்தக்கது. விஞ்ஞானத்திற்கு முன் பாதையிலேயே சித்தாந்தம் சென்று இருக்கிறது. விஞ்ஞானிகள் பிரபஞ்சத் தோற்ற முடிவுகளுக்கு ஒரு கர்த்தா வேண்டுமென்பதும், உண்டெனின் அப் பதியின் இலக்கணம் என்னையோ என்பதும், பிரபஞ்சம் ஒடுங்கும் காலத்தில் எதில் ஒடுங்குகிறது அவ்வொடுக்கத்துக்குச் சங்கார கர்த்தா உண்டோ என்பதெல்லாம் ஆராயமாட்டார் போலும். அவை தத்துவ ஆராய்ச்சிக்கு விடப்பட்டது போலும். ஏனெனில் அவைகள் விஞ்ஞான அளவைக்கு உடன்பட்டவையல்ல. ஆனல் மேலும் மேலும் விஞ்ஞானம் விருத்தியடையும் இக்காலத்தில் விஞ்ஞான மேதைகள் தத்துவ ஆராய்ச்சிகளில் புகுந்துவிடும் நேரம் வந்தாய்விட்டது. சென்ற நூற்றாண்டில் விஞ்ஞானமும் சமயமும் முரண்பட்டவை என்று மேனாட்டார் கருதினர். அந்தக் கூற்று இப்போது மாறி வருகிறது. இந்த நேரத்தில் சைவ சித்தாந்தத்தில் பிரமாண இயலில் கூறப்பட்டுள்ள பதி பசு பாச இலக்கணங்களை மேனாட்டு முறையில் உலகுக்கு விளக்கிக் காட்டுவது சித்தாந்திகளின் கடமையாகும்.

பேராசிரியர் ஹாயிலின் கூற்று பிரபஞ்சம் இயல்பாகவே நிலையானது (உலகாயதம்); அது அணுக்களினல் மாறுதல் (கணபங்கம்) அடைகின்றது என்பது சித்தாந்தத்தால் பூர்வபக்ஷம் செய்துள்ள உலகாயதர், சாருவாகர்,

சௌத்திராந்திகர் கொள்கைகளுக்குச் சற்று ஒத்துள்ளது. ரைலியின் கூற்று "உலகமெலாம் வருமுறை வந்து நின்று போவது" என்ற சித்தாந்தக்கொள்கைக்கு (Cosmology)க் குச் சற்று உடன்பாடா யிருக்கிறது. அந்த முறையிலே மேனாட்டு விஞ்ஞானம் சைவ சித்தாந்தத்திற்கு நெருங்கி வந்துகொண்டு இருக்கிறது. இதுவரையில் மேனாடு கொண்ட கொள்கை நியாய வைசேடிகக் கூற்றுக்குச் சிறிது நட்புக்கொண்டிருந்தது. இப்போது சித்தாந்தத்திற்கு அரணாகவந்து நிற்கும் போலும்.

சிவஞான சித்தியார் செய்யுட்கள் மிகத் தெளிவாக இந்த உண்மையை விளக்குகின்றன. சித்தாந்தம் உலகாயதர் மதம்பற்றி உலகம்தோன்றி யழிதலில்லை யென்பாரை மறுக்கிறது. உலகம் வந்து நின்றுபோவதை வலியுறுத்து கிறது. உலகம் தோன்றி யழிதல் இயல்பு என்பாரை மறுத்துத் தருபவன் ஒருவன் வேண்டும் எனக் கூறு கின்றது. பூதங்களே செயப்படுபொருளுங் கருத்தாவுமாம் என்பாரை மறுக்கிறது. சௌத்திராந்திகர் மதம்பற்றி ஒன்றன் கேட்டில் ஒன்று தோன்றும் என்பதை மறுத்து வருமுறையில் தருபவன் ஒருவன் வேண்டுமெனக் கூறு கிறது. மாத்துமிகர் முதலியோர் மதம் பற்றி இல்லதும் உள்ளதுமல்லாதது தோன்றுமென்பாரை மறுத்து வரு முறையில் தருபவன் ஒருவன் வேண்டுமெனக் கூறுகிறது. சமணர் மதம்பற்றி உள்ளதும் இல்லதுமானது தோன்று மென்பாரை மறுத்து வருமுறையில் தருபவனொருவன் வேண்டுமெனக் கூறுகிறது. மீமாம்சகர் மதம்பற்றி உட லழியுமன்றி உலகமழியா தென்பாரை மறுத்து உலகமும் அழியும் எனக் கூறுகிறது. ஒருசேர அழியாதென்பதை யும் மறுக்கிறது. காலமே கடவுளென்பதையும் மறுக் கிறது. தார்க்கிகர் மதம்பற்றி அணுக்கள் தாமே உலக மாய்த் தோன்றி நின்றழியும் என்பதையும் மறுக்கிறது. அணு காரியமாதலால் காரண மாகாதென்று நிரூபிக்கின் றது. மாயையே முதற் காரண மென்பதை வற்புறுத்து கின்றது. காரணத்தில் சூக்கும ரூபமாய் ஒடுங்கியிருந்த காரியமே தூலரூபமாய்த்தோன்றுமெனச்சற்காரியவாதத் தியல்பு கூறுகிறது. உலகம் அவத்தை வேறுபாட்டால் அழிபொருளென்று சொல்லப்படுகிறதேயன்றி நித்தப்

பொருளே எனக் கூறுகிறது. சாங்கியர் மதம்பற்றி மாயையே தன் காரியத்தைத் தோற்றுவிக்கும் என்பாரை மறுத்துத்தருபவன் ஒருவன்வேண்டுமெனக்கூறி, தருபவன் வருமுறையை வெகு விரிவாகத் தொகுத்துக் கூறுகிறது. அருவமாகிய மாயையினின்றும் உருவந்தோன்ருதென்னும் மாயாவாதி கூற்றையும் மறுக்கிறது. விரிக்கில் பெருகும்.

ஸ்தூலமான உலகு சூக்குமமான மாயையில் இறைவன் இச்சையால் அடங்குமென்பது தற்காலக் கூற்ருன 'இன்டர் சேஞ்சபிலிடி ஆப் மாட்டர், அண்டு இனர்ஜிக்கு அரண் செய்கிறது.'

முக்கியமாக ஈண்டு நோக்கற்பாலது மேல்நாட்டு விஞ்ஞான நுண்ணறிவு சித்தாந்தத்தை அணுகி வந்துகொண்டிருக்கிற தென்பதே. ஆனல் சித்தாந்தத்தின் தத்துவம் (மெடாபிசிகஸ்) மேல்நாட்டுக்கு வேதாந்தத்தைப்போல் இன்னும் அறிமுகமாகவில்லை. ஏனெனில் ஆங்கிலத்தில் சித்தாந்த நூல்கள் போதுமானவை இல்லை. சென்னையில் 26-2-61-ல் திரு. பிரிட்ஸ் கூன்ஸ் என்ற ஓர் அமெரிக்க நிபுணர் 'விஞ்ஞானமும் தத்துவமும்' என்பதைப்பற்றிப் பேசுகையில்(ஹிந்து 1-3-61இதழ்பார்க்க) இந்தியத் தத்துவ உண்மைகளையும் நவீன விஞ்ஞானக்கூற்றுகளையும்பிணைக்க வேண்டும். இல்லையேல் உலகாயதம் (மெடீரியலிஸம் அல்லது பிசிகலிஸம்) என்ற படுகுழியிலேயே மனிதர் அறிவும் செயல்களும் வீழ்ந்துகிடக்கும் என்று கூறினர்கள். எனவே நம்மவர்கள் விஞ்ஞானத்துடன் சித்தாந்தத்தையும் படித்து, அதன் உண்மைகளை உலகுக்கு எடுத்துக்காட்டல் கடமையாகும்.

---

# அகத்தியர் தேவாரத் திரட்டு தொகுத்த காலம்

(மு. அருணசலம்)

தமிழ் நாட்டில் சோழநாட்டுப் பகுதியில் சென்ற தலைமுறை வரையில் சைவப் பெருமக்கள் வீடுகள் எங்கும் தேவாரத்திரட்டு என்ற நூல் படிப்பது வழக்கமாய் இருந்தது. பரஞ்சோதி திருவிளையாடல், பெரிய புராணம், திரு

வாசகம், தேவாரத்திரட்டு என்பன அக்காலத்தில் எல்லோர் வீடுகளிலும் பயின்ற நூல்கள். சில இடங்களில் அபூர்வமாய்க் கந்த புராணமும் உண்டு.

தேவாரத்திரட்டு என்பது தேவாரங்களிலிருந்து தொகுத்த பாடல்கள் என்ற பொருளுடையதன்று. சிறப்பாக, சிவாலய முனிவர் என்ற பக்தருக்காக, அகத்திய முனிவர் மூவர் தேவாரங்களிலிருந்தும் திரட்டிக் கொடுத்த 25 பதிகங்களாகிய தொகுப்பு என்றே இத்திரட்டு பொருள்படும். இதனுள் அடங்கிய பதிகங்கள்: சம்பந்தர் 10, அப்பர் 8, சுந்தரர் 7; ஆக 25.

சிவாலய முனிவர் வரலாறும் இங்கு அறியத்தக்கது. மூவர் அருளிய தேவாரங்கள் அடங்கன்முறை என வழங்கி வந்தன. கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் சிறந்து விளங்கிய சிவாலய முனிவர் அந்த அடங்கன் முறையை நாள்தோறும் பாராயணம்செய்ய விரும்பினர். ஆனால் பல்லாயிரம் பாடல்கள்கொண்ட அப்பாசுரங்கள் முழுமையும் நாள்தோறும் முறைப்படி பாராயணம்செய்ய முடியாமையால் வருந்தி, அத்தேவாரப் பதிகங்களை வெளிப்படுத்திய தில்லை நடராஜப் பெருமானையே தாழ்ந்து வணங்கி, தாம் முறைப்படி பாராயணம்செய்ய ஒரு வழி புலப்படுத்துமாறு குறையிரந்தார். பொதிகை மலையை அடைந்து அங்கு அகத்திய முனிவரைக் கண்டு விண்ணப்பிக்குமாறு பெருமான் அவருக்குக் கட்டளையிட்டார். அவரும் அங்ஙனமே சென்று அகத்திய முனிவரை நோக்கி மூன்று ஆண்டுகள் தவம் இருந்தாராம். அவருடைய தவத்துக்கு இரங்கி, அகத்தியர் வெளிப்பட்டு, அடங்கன்முறை முழுவதையும் உபதேசித்து அதிலிருந்து குருவருள், பரையின் வரலாறு, திருநீறு, அஞ்செழுத்துண்மை, கோயில்திறம், சிவனுருவம், திருவடி, அருச்சனை, அடிமைத்திறம் என்னும் எட்டு நிலைகளைக் கொண்ட 25 பதிகங்களைத் திரட்டித் தந்து "இவற்றை முறைப்படி தினமும் பாராயணம் செய்தால் அடங்கன்முறை முழுவதையும் பாராயணம்செய்த பலன் கிடைக்கும்" என்று அறிவுறுத்தினர். சிவாலய முனிவர் அவ்வாறே நீண்டநாள் அத்திரட்டைப் பாராயணம்செய்து பின் முத்தி அடைந்தார் என்பது வரலாறு.

" இப்பரிசு அகத்திய முனிவன் இருநிலத்து
ஒப்பரும் மூவர் ஓது தேவாரம்
முழுதையுஞ் சிவாலய முனிக்கு அறிவித்துப்
பழுதிலா அவையுட் பரிந்தெடுத்து இருபத்து
ஐந்துயர் பதிகமும் அறிவுறத் திரட்டி
எண்ணரும் அடங்கல் யாவையும் உணரும்
புண்ணியம் இவைகொடு பொருந்தும் என்றவன்
தனக்கருள் செய்தனன், தகவுற அதனல்
நீதிலா அகத்தியத் திரட்டினை உலகில்
ஓதினர் அடங்கலும் ஓதினர் அவரே "

என்ற பாடற் பகுதி இவ் வரலாற்றைச் சுட்டிக்காட்டும்.

" குருவருளும் வெண்ணீறு எழுத்தஞ்சும் கோயில்
அாறுருவும் என் தலைமேல் ஆக்கும்—திருவடியும்
சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனுர் எட்டு "

என்ற பழம் பாடல் தேவாரத்திரட்டு நுதலிய பொருளைக் குறிப்பிடும். இந்த எட்டு நிலைகளும் சீவன் முத்தர் நிலை எனப்படும்.

இந்தப் பழமையானவரலாறு எப்போதுதோன்றியது? இச் சிவாலய முனிவர் உண்மையாகவே வாழ்ந்தாரா? இவருடைய வரலாறு வெறும் ஐதிகக் கதையா அல்லது சரித்திர சம்பந்தம் உடையதா? என்ற செய்திகள் இது வரையில் விளக்கம் பெறுமலேயே இருந்து வந்துள்ளன.

* * * *

1910-ஆம் ஆண்டு மெய்கண்ட சாத்திரங்களின் உரைத் தொகுதி இரண்டாம் பதிப்பு, சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் வெளியீடாகச் சாது அச்சுக்கூடத்தில் அச்சாகிக் கொண்டிருந்தது. அதன் முதல் பக்கம் தொடங்கி 1296-ஆம் பக்கம் முடியப் பரிசோதிக்கும் பொறுப்பும், பிழைதிருத்தும் பொறுப்பும் எனக்கே இருந்தன. இப் பதிப்பில் நான்கு புதிய உரைகள் வெளிவந்தன. இருபா இருபது - சொழித் தத்துவநாதர் உரை; உந்திகளிறு - பழைய பொழிப்புரைகள்; சிவப்பிரகாசம் - மதுரைச் சிவப் பிரகாசருடைய மிகப் பெரிய பாஷியம். இவ்வுரைகளைப்

புதிதாக இப் பதிப்பில் வெளியிடவேண்டும் என்று நான் சொன்னபோது, நல்ல விஷயங்களை ஊக்குவிக்கும் வல்லமை பெற்றிருந்தவரான ம. பாலசுப்பிரமணிய முதலியார் சம்மதித்தார். ஆனல் அவர் இந்தப் புதிய பரிசோதனைக்கு ஒரு வினடிகூட அவகாசம் அளித்ததில்லை. இரவு 6-30 மணிக்குப் புருப்கொடுத்தால், காலை 7-30-க்குள் திருத்திக் கொடுத்துவிடுவதோடுகூட, புதிய பாரத்துக்குப் பக்கங்களும் தயாரித்துக் கொடுக்கவேண்டும். பகல் நேரம் முழுமையும் நான் அரசாங்கக் காரியாலயத்தில் பணி புரிய வேண்டியவன். ஆகவே வேலையின் வேகத்தையும் தொந்தரவையும் ஒருவாறு உணரலாம்.

இந்தச் சூழ்நிலையிலும் இந்தச் சித்தாந்த சாத்திரப் பதிப்பு, குறிப்பாக மதுரைச் சிவப்பிரகாசர் உரைப் பகுதி, எனது சமய-இலக்கிய - சரித்திர அறிவுக்குப் பெருவிருந்து அளித்தது. அதை இங்கு விரிக்கில் பெருகும். அப்போது தனியே வெளியான சிவப்பிரகாச உரைப் பதிப்பின் அனுபந்தமாக என் ஆராய்ச்சிக் குறிப்புக்கள் மூன்று பக்கம் எழுதிச் சேர்த்திருக்கிறேன்.

சிவப்பிரகாசர் உரையானது 13, 14, 15 நூற்றுண்டுகளில் சைவ உலகம் எவ்வாறு பரம்பரையாக வளர்ந்தது, இலக்கியப் பரப்பில் விரிந்தது என்றெல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல எடுத்துக் காட்டிற்று. ஆர்வம் மீதூர அதைப் பலரிடமும் எடுத்துச் சொல்லிச் சொல்லி வியந்திருக்கிறேன்.

வியப்புக்களுக்கு அடிப்படையான பல குறிப்புக்களில், திருநெறி விளக்கம் என்ற ஒரு சிறு நூல் பற்றிச் சிவப்பிரகாசர் எழுதியுள்ள குறிப்புக்கள். சிவப்பிரகாசத்தின் பொருளை விளக்குவதற்காக அவர் இதன் செய்யுட்கள் இரண்டொன்றை எடுத்துக் காட்டி சொல்லியுள்ள முறை: "இந்தத் திருநெறி விளக்கம் பின்நூலாயிருக்க, இதனை எதுக் காட்டியது எது என்னில், இந்நூல் சிவப்பிரகாசத்தைப் பின்சென்ற நூலாய் இருக்கையினாலும், அன்றியும் விருத்தம்தோறும் விருத்தம்தோறும் சத்தம் பேதித்துவருகையே அன்றிச் சத்தம் ஒன்றுபட்டு வருகையாலும், அது காட்டவேண்டி என்பார்." இவ்வாறு அவர் சிறப்பித்துக் காட்டுகின்ற பாடல்கள் ஆறு.

இந்த நூல் ஒன்று இருப்பதாக எங்குமே தெரிந்திலது. இதன் அருமைபற்றித் தருமபுரத்தாரின் ஞானசம்பந்தம் பத்திரிகையில் ஒரு கட்டுரையும் அப்போது எழுதியிருந்தேன். பின்னர், தஞ்சைச் சரஸ்வதி மஹாலில் இதன் பிரதி இருப்பது தெரியவந்தது. இதைப் பற்றிக் கடலூர் தி. கி. நாராயணசாமி நாயடு அவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது, நல்ல விஷயங்களில் உடனே செயல்படும் அளவு பற்றுதல் மிகுந்தவராகிய அவர் அச்சிறு நூலைப் படி எடுக்கச்செய்து சென்ற ஆண்டு சித்தாந்தம் இதழ்களில் வெளியிட்டார். அன்பர்கள் பார்த்திருப்பார்கள்.

அத் திருநெறி விளக்கம் 116 பாடல்கள் கொண்டது. இதில் 11-ஆம் பாடல், திருநெறி விளக்க ஆசிரியருடைய குருவாகிய சிவாலய முனிவரைத் துதிப்பது.

*அன்புநிறை குருஅருளும் நீறும் உண்மை*
*அஞ்செழுத்தும் ஆலயமும் அறிவுக் கெட்டா*
*இன்பமிகுஞ் சிவன்உருவுஞ் சென்னி மீதே*
*இருத்தும்மலர்ச் சேவடியும் இறைவன் தன்னைத்*
*துன்பமற அர்ச்சிக்குந் தொழிலும் தொண்டர்*
*தொண்டாடித் தொண்டன்எனுந் தொண்டில் வீடும்*
*தென்பொதியிற் குறுமுனிபால் பெற்ற எங்கள்*
*சிவாலயமா முனிபாதஞ் சிந்தை செய்வாம்.*

இதனுள் ஆசிரியர் குரு அருள், நீறு, அஞ்செழுத்துண்மை, ஆலயம், சிவன்உரு, சேவடி, அர்ச்சிக்கும் தொழில், தொண்டில் வீடு ஆகியவற்றைத் தென் பொதியில் திருமுனிபால் பெற்ற எங்கள் சிவாலய மாமுனி பாதம் சிந்தை செய்வாம் என்கிறார். இது அகத்திய முனிவரையும் அவரால் எட்டு திலகனை விளக்கவல்ல தேவாரப் பதிகங்களைத் திரட்டிக் கொடுக்கப்பெற்ற சிவாலய முனிவரையும் குறிக்கின்றது என்பது வெளிப்படை.

இதனால் பெறப்படுவது யாதெனில், சிவாலய முனிவர் வரலாறு வெறுங் கதையல்ல என்பதும், அவர் உண்மையாகவே வாழ்ந்த ஓர் ஞானாசிரியர் என்பதுமாகும். அவர் கதை கட்டுக் கதையல்ல; காலத்தால் அவர் திருநெறி விளக்க ஆசிரியருக்கு முந்தியவர்.

இனி மதுரைச் சிவப்பிரகாசர் நூல் செய்த காலம் கி. பி. 1488. உமாபதியார் சங்கற்ப நிராகரணம் செய்த காலம் கி. பி. 1313. திருநெறி விளக்கம் சிவப்பிரகாசத்தை அடியொற்றிச் செய்யப்பெற்ற நூல் என்று நம் உரைகாரர் விதந்து கூறுவதால், அந்நூல் செய்யப்பெற்றது 1313-லிருந்து 100 ஆண்டுகளுக்குள் இருக்கலாம் எனக் கருது வோம். எனவே திருநெறி விளக்க காலம் 1413. இதன் ஆசிரியரின் குருநாதராகிய சிவாலய முனிவரின் காலம் 1375—1400-க்குள் இருக்கலாம். உமாபதியாருடைய சிஷ்ய பரம்பரையில் தோன்றிய எண்ணற்ற ஞானசிரியர்கள் இந்தக் காலத்திலே வாழ்ந்தார்கள். (முற்கூறிய சிவப்பிர காச உரை அநுபந்தம் பக்கம் 341—343 பார்க்க.) இந்தக் காலத்தில் நம் ஆசிரியர் சிவாலய முனிவர் உண்மையாகவே வாழ்ந்தார். தேவாரத் திரட்டு தொகுத்துத் தரப்பெற்றுச் சைவ மக்களிடையே பரப்பினர் என்பது இதுகாறும் ஆராய்ந்தவற்றால் பெறப்படும் செய்தி.

எனவே, அகத்தியமுனிவர் திரட்டிய தேவாரத்திரட்டு என்பது திரட்டப் பெற்று வழங்கத் தொடங்கிய காலம் கி. பி. 1375–1400.

---

# பயன்மிக்க வழிபாடு

[திரு. மா. ப. தியாகராஜ முதலியார், பி.ஏ.]

நன்றுடை யானைத் தீயதிலானை நரைவெள்ளேறு
ஒன்றுடை யானை உமையொருபாக முடையானைச்
சென்றடை யாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடை யானைக் கூறஎன்னுள்ளம் குளிருமே.

மக்கள் பயின்றுவரும் பல கலைகளும், வாழ்க்கையைப் பயன்மிகச் செய்து புகழ்பெற வேண்டுமென்ற நோக்கத் துடனேயே கற்கப்படுகின்றன. எக் கலையைப் பயில்வோ ரும் அக்கலை பயின்ற அறிஞர் பெருமக்களைக் குறிக்கோளா கக்கொண்டு வழிபடுதலியல்பாகக் காண்கிறோம். மல்யுத்தம் பழகுவோர் மல்யுத்த ஆட்கள் படங்களைத் தாம் சாதனை செய்யுமிடத்தில் வைத்திருக்கக் காணலாம். நடிகக் கலையில் பிரியமுள்ளவர்கள் நடிகர்கள் படங்களைக்கொண்டு தம் வீடுகளையும், இருப்பிடங்களையும் அலங்கரிக்கின்றார்கள்.

சங்கீத வித்வான்கள் எவரும் திரு. தியாகராஜ சுவாமிகளை வழிபடுவதுடன் அவர்களுக்கு விழாக்களும் கொண்டாடு கிறார்கள். உபநிடத வேத நூல்கள் கற்கப் புகுவோர் ஆதி சங்கரரை வழிபடக் காண்கிறோம். திருஞானசம்பந்தர் முதலிய நால்வர் வழிபட்ட வெள்விடைப் பாகன், வாழ்க் கைக் கலைக்கே வழி காட்டியென உணர்ந்து அவன்மேல் பாடிய தேவாரங்களுள், மேலே அமைந்துள்ள பாடல் வாழ்க்கையில் குன்றலைய புகழ்பெற்றுப் பயனடைதற்குத் துணைக் காரணமாக வேண்டுவன யாவையென்பதை விளக்குகிறதைக் காணலாம்.

"நன்றுடையான் தீயதிலான்" என்ற தொடர் சிவபெரு மானால் நமக்காகக் கருணைகூர்ந்து செய்யப்படும் செயல் கள் யாவும் நம்முடைய நன்மையைக் குறித்தேயாகும் என்ற உண்மையை உணர்த்துவதாகும். நோய்போக்க மருந்துண்ணவைப்பது வருத்தத்தை உண்டுபண்ணுவது போற் காணப்படினும், முடிவில் நோய்நீங்கிச் சுகத்தைக் கொடுக்கும் செயலென்பதை உணர்ந்தே "வாளாலறுத் துச் சுடினும் மருத்துவன்பால் மாளாக் காதல்" கொள் கிறான் நோயாளன். "கண்டா ரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லாற் பேணாத குலமகள் போல்"தான் ஆண்டவனை நேசிப்பதாகக் குலசேகராழ்வார் பாடுகிறார். இயற்பகை நாயனாரை என்ன செய்தார் சிவ பெருமான்? அவருடைய மனைவியைத் தம்முடன் அனுப்பும் படி அழைத்துச் சென்றார். அது கண்ட சுற்றத்தவர்கள், என் அக்கதையைக்கேட்கும் இக்காலத்தவர்களும், கண்டா ரிகழச் சிவபெருமான் செய்த காரியம் தகாது என்று கூறு கின்றார்கள் அல்லவா! அப்படிப்பட்டவர்கள் ஐயப்பாடு நீங்கி வழிபாடு செய்தல்வேண்டும் என்பதை உணர்த்தவே ஆண்டவனை "நன்றுடையான் தீயதிலான்" என்ற இரு தொடர்களால் வற்புறுத்திப் பாடியுள்ளார்கள். வாழ்க் கையில் பிறருக்குத் தீங்குவிளைவிக்கும் சொல்லோ செய்கை களோ நாம் செய்தல்கூடாது என்பதையும் நாம் கற்க வேண்டும்.

"கற்றதனலாயபயன்" நற்றாள் தொழுதல் என உணர்ந்து தொழுதலேயாகும். நன்மைக்கே பணியாற்றக் கற்று அறிவு உடைமையாதலே முதற்கண் வாழ்க்கையின்

நோக்கமாக இருத்தல் வேண்டுமென்பது காட்டப்படு கிறது. நன்மைக்காகத் தீங்கிழைக்காமல் வாளா இருத் தலும் வாழ்க்கைக்கு அழகல்ல. நன்மையைச் செய்யப் பணியாற்ற வேண்டும். பிறருக்காக உழைக்கவும் வேண் டும் என்பதை "வெள்ளேறு ஒன்றுடையான்" என்ற தொடர் உணர்த்தக் காணலாம். உழைப்புக்கு மாட் டையே உதாரணமாகக் காட்டுவதை "மாடுபோல் உழைக்கின்ருன்"* என்று சொல்லும் உலக வழக்கி லிருந்து காண்கிரும். யானை அதைவிட அதிகம் உழைத் தாலும் "யானைபோ லுழைக்கின்ருன்" என்று யாரும் சொல்வதில்லை. என் மாட்டிற்குள்ள பெருமையும், வேண்டுதல் வேண்டாமையின்றி உழைக்கும் தன்மையும் வேறு பிராணிகளிடத்துக் காண்பதரிது. சேற்றில் அழுந் திய எரையும் வலிந்து இழுத்தேதீரும். ஏரை இழுக்கச் சோர்வடைந்து விழுந்துவிடும் தன்மை அதனிடத்தில் காணப்படமாட்டாது. எந்த ஏரில் பூட்டினும் மாடுஉழைக் கும். அதன் உழைப்பினல் உலகுக்கே உணவு சாகுபடி செய்யப்படுகிறது. உலகுக்கே நன்மை பயக்கும் உழைப்பை உறுதிப்பாடுடன் செய்பவர்கள் உள்ளத்தையே தமக்கு ஊர்தியாகச் சிவபெருமான் கொண்டுள்ளான் என்பதை "நரை வெள்ளேறு ஒன்றுடையான்" என்ற தொடர் எடுத்துக் காட்டுகிறது. எருதின் காரணமாக வளர்க்கப் படும் பசுவும் பயன் அளிக்கிறது. எனவே நாம் ஒருவரிடம் உழைப்பைப் பெறின் அவரைச் சார்ந்தவர்களையும் பரிபா லித்தால் அவர்களாலும் நன்மையுண்டாம் என்பதையும் எருதின் தன்மை உணர்த்துகிறது.

நன்றுடையறிவும், எருகனைய உழைப்பும் கொண்ட வர்களே தம்முடைய ஊதியத்திற் பங்குகொடுக்க வாழ்க் கைத் துணைவியைப்பெறலாம். தம்முடைய உழைப்பாலும் அறிவாலும் பெறக்கூடிய நன்மைகள் பொருள்கள்யாவும் பிறருக்குப் பயன்படும்படியாகப் பங்கிட்டுக் கொடுக்க வாழ்க்கைத் துணைவிவேண்டும். சேமித்தல் ஆண்கள் பங் கெனின் கொடுத்தல் பெண்கள் பாகமெனக் காட்ட, "உமையொரு பாகமுடையான்" சிவபெருமான். அருள் பாலித்தல் அன்னையின்செயலென்பது தெரிந்த உண்மையே.

*"மடுத்தவாய் எல்லாம் பகடன்ஞன்"—திருக்குறள்.

எனவே வாழ்க்கைத் துணைவி கொள்ளல் சிற்றின்பமட்டும் அடைவதற்கல்ல என்பதை ஆண்பெண் இருபாலாரும் உணர்ந்து சேமித்தல்மட்டும் வாழ்க்கைக்குச் சிறப்புத் தர வல்லதல்ல வென்பதையும் உணர்ந்து "சேமித்ததைப் பிறருக்கு வழங்க ஒரு வாழ்க்கைத் துணைவியை நியமித்துக் கொள்ளல் இன்றியமையாதது என்பதையும் உணர்தல் வேண்டும். அதை உணர்த்தச் "சிவபெருமான் உமையொருபாகமுடையான்" எனச் சிறப்பிக்கப்பட்டான்.

"சென்றடையாத திரு" வாழ்க்கைத் துணைவியேயாம். கணவனை இழந்த ஒரு பெண்டிற்கு அவன்போல் ஈடுபடுத்த எதைத் தரமுடியும்? அதேபோல் மனைவியை இழந்தார்க்குமாம் என உணர்தல்வேண்டும். வாழ்க்கைத் துணைவிக்கிடமாக ஒரு பொருளைச் சென்றடைய முடியாது என்ற உறுதிப்பாட்டுடன் கணவனும் மனைவியும் வாழ்க்கையின் இரு கூறுகளாகச் சேமித்தல் பங்கிடுதல் என்ற இரு செயல்களுக்கும் கர்த்தாக்களாக வாழவேண்டுமென்பதை, "சென்றடையாத திரு உடையான்" என்ற தொடர் உணர்த்துவதாகக் கொள்ளல்வேண்டும்.

அப்படிப்பட்ட வாழ்க்கையே சிராப்பள்ளிக் குன்றையொத்த புகழைத் தரவல்லது. "இல்லதுஎன் இல்லவள் மாண்பானால் உள்ளதுஎன் • இல்லவள் மாணாக் கடை" என்று திருவள்ளுவர் கூறுகிறாரல்லவா? இளையான்குடி மாற நாயனாரின் இல்லாள், நடுநிசியில் வந்த அடியவரை உபசரிக்க உணவில்லையே என்று வருந்தப்பட்ட தம்கணவரைத் தேற்றி ஆவன செய்த காரணத்தால் அவர்களுடைய வாழ்க்கை இன்றும் போற்றப்படும் புகழ்பெற்று விளங்குகிறது. அதுவே சிராப்பள்ளிக் குன்றையொத்த உயர்ந்த ஒளி காட்டும் வாழ்க்கைப் புகழாகும். அப்படிப்பட்ட வாழ்க்கைக்குத் துணை காரணமாக உள்ளவை, நன்றுடையறிவு, பாடுடைய உழைப்பு, அருளவல்ல இல்லாள் என்பவைச் சிவபெருமானின் சின்னங்களாக மேற்படி தேவாரத்தில் எடுத்துப் பாடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட வாழ்க்கையை நினைப்பதாலேயே உள்ளங்குளிரும் என்று திருஞான சம்பந்தர் அப்பாடலை முடித்தலால், அவ்வாழ்க்கையைக் கைக்கொண்டு வாழ்தல் எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுக்குமென்பது கூறாமலே விளங்கும்.

அப்படிப்பட்ட உண்மைகளை நினைப்பூட்டவல்ல பாடல்களைப் பாடி இறைவனை வழிபடுதல் பயன் மிக்க வழிபாடாகும். அப்பாடல்களை மனனம்செய்து வருதலால் தூய செய்கைகளில் தானாகவே மனமீடுபடும். இந்த உண்மைகளை ஒன்றுபடத்திரட்டி ஒருபாட்டாகப் புலவர் இராமநாத பிள்ளை அவர்கள் கீழ்வரும் பாடலியற்றியுள்ளார்கள்.

உணர்வொழுக்கம் மிக்க உழைப்புடைமை நல்ல
உணர்வினராய் வாழ்க்கை உறுற்றல்—மணவாழ்க்கைப்
பெண்ணே நிறைபொருளப் பெண்ணல் பெரும்பண்பும்
விண்புகழும் ஆம்நன்று வேண்டு.

இதன்கண் காணப்படும் ஐவகைச் செயல்களும் முறையே "இன்பம், பொருள், அறம், வீடு, பேறு" எனக் கொள்க.

---

# யாத்திரைக் கட்டுரை

(மலேயா-திரு. கே. இராமநாதன் செட்டியார்)

## 2. பிரயாணம்

சிலருக்கு இந்தியா புதிது. இன்னும் சிலருக்கு வீட்டில் யாவரையும் விட்டுத் தனியே வெகுநாள் வெளிச் செல்வது புதிது. யாத்திரை கிட்டியதென்று மகிழ்ந்தனர் சிலர். பலருடன் கூடியிருப்பதில் ஒரு சந்தோஷம், ஒரு புதிய உணர்ச்சி, எப்படித் தூக்கம் வரும்? மேலும் எங்களை வழியனுப்ப தாப்பாரோட்டிற்குத் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்து ஞானனந்த சுவாமிகளும், திரு. புரிசை முருகேச முதலியாரவர்களும் வந்திருந்தனர். குழுவினர் யாவரும் சந்தித்தோம்.

காலையில் சேர்ந்து பிரார்த்தனை ஐந்தேமுக்கால் மணிக்குத் தொடங்கினேம். வழக்கம்போல் பிரார்த்தனை அரைமணி நேரம். ஒரு ரயில் பெட்டியில் கீழ்ப்படுக்கையெல்லாம் எங்களது. ஆகையால் பிரார்த்தனைக்கு மிகச் சௌகரியமாக இருந்தது. இந்த யாத்திரை சிறப்பாக நடைபெற வேண்டுமென்பதும் எங்களுக்கும் பிறருக்கும் பயன்தர வேண்டுமென்பதும் எங்கள் நோக்கம். அந்த

நோக்கத்தை அடையக் கட்டுப்பாடு அவசியம். இன்று இரண்டு தீர்மானங்கள் செய்யப்பெற்றன. ஒன்று இதுவரை வாரத்தில் ஒரு நாளேனும் விரதத்தை அனுசரிக்காதவர்கள் இந்த யாத்திரையில் ஒரு வேளையாவது உண்பதை விடவேண்டும். இரண்டாவது ஒவ்வொருவரும் ஒவ்வொருநாளும் யாத்திரையில் இரண்டு மணி நேரம் மௌன விரதம் காக்கவேண்டும். எங்கள் குழுவில் சிலர் முன்னரே ஒரு மணி நேரம் தினமும் மௌனம் இருந்து வந்திருக்கின்றனர்.

பினங்கு: பினங்கில் திரு. துரைசாமித்தேவர் அவர்கள் பல ஏற்பாடுகள் செய்திருந்தார். அவ்வூர் சென்றதும் தண்ணீர்மலை தண்டாயுதபாணி கோயிலுக்கு வணக்கத்திற்குச் சென்றோம். கோயில் காரியக்காரர் அன்புடன் உபசரித்து சுவாமி தரிசனம் செய்து வைத்தார். கயிற்று ரயில் பார்க்காதவர்கள் ஏறிப்பார்த்து வந்தனர். இரவு இராமகிருஷ்ண ஆச்சிரமத்தில் பிரார்த்தனைக் கூட்டம். அருள்நெறி மன்றம் என்ற சங்கம் சில ஆண்டுகளாக இவ்வூரில் வேலை செய்துவருகிறது. இச் சங்கத்தைத் தொடக்கியவர் சித்தாமூர்த்து அடிகளார். திருவாட்டி விசாலாட்சி அம்மையார், இச்சங்கத்தின் பிரார்த்தனைக் கூட்டம் ஒழுங்காக நடத்திவருகிறார். அவர்களும் அவர் சகாக்களும் எங்கள் கப்பலில் வந்தனர். ஆச்சிரமத்தில் எல்லாருக்கும் உபசாரமொழி கூறப்பெற்றது. இவ்வளவு பேர் சேர்ந்து இந்தியா யாத்திரைக்கென்று மலாயாவிலிருந்து போனதில்லையென்றும் இதுவே சரித்திரத்தில் முதல் தடவையென்றும் கூறினார்கள். இங்கு திருவாட்டி உருத்திராணி சேனன் அவர்களைச் சந்தித்தேன். அவர் கணவன் இறந்துவிட்டார். அவருடைய தொழிலை அந்த அம்மையே திறம்பட நடத்திவந்தார். குழந்தைச் செல்வம் நிறைய உண்டு. திருவாட்டி உருத்திராணி கிருஷ்ணபக்தை. சங்கீதம் பயின்றவர். ஹிந்து சமயத்தில் பிறந்து அந்த சமயத்தைப் புறக்கணிப்பது அந்த அம்மைக்குக் கொஞ்சமும் பிடிக்காது. எங்களுடன் ரிஷிகேஷ்வரை சேர்ந்து வந்தார். எங்கள் பிரார்த்தனைக் கூட்டங்களில் கலந்து கொள்வர்.

மற்றும் இருவர் இங்கே சேர்ந்து கொண்டனர். ஒன்று முன்சொன்ன திருவாட்டி விசாலாட்சி அம்மையார்,

மற்றவர் பார்வதியம்மையார். பின்னவர் தமிழ்ப் பள்ளி ஆசிரியை. அவர் மகன் கொஞ்சம் சித்தசுவாதீனமில்லாதவன். அவனைச் சுவாமி சிவானந்தாவிடம் காட்டக் கூட்டி வந்தார். அந்தப் பையனைக் கொண்டுவருவது அவருக்கு மிகவும் கஷ்டந்தந்தது. அந்தப் பையனைச் சென்னையில் நிபுணர்களிடம் ஒப்புவித்துவிட்டு அந்த அம்மை ரிஷிகேசம் எங்களுடன் வந்தார்.

எங்களுக்குப் பினங்கில் பல உதவி செய்தவர்கள், திரு. துரைசாமித்தேவரும் அவர் குடும்பத்தாரும். அவர்கள் கப்பலுக்கும் வந்து வழியனுப்பினர்.

கப்பல்: கடல் எல்லா நாளும் அமைதியாக இருந்தது. தன் சக்தியைக் காட்டவில்லை. ஆகையால் எங்கள் காரியங்களைப் பார்க்க முடிந்தது. காலையில் அரைமணி நேரமும், மாலையில் முக்கால் மணிநேரமும் பிரார்த்தனைக் கூட்டம் நடத்தினோம். தினமும் எங்களைத் தவிர ஐந்தாறு பேர் சேர்ந்து கொண்டனர். பலர் கொஞ்சநேரம் நின்று பார்த்து விட்டுப் போயினர். கப்பல்காரர்கள் எங்கள் பிரார்த்தனைக்கு உதவி செய்தனர். பல சத் விஷயங்களைப் பற்றிப் பேசினோம். எங்கள் கூட்டத்தில் பலர் பாட்டுக்களை மனனம் செய்தனர். கப்பலில் இருந்த நாளெல்லாம் நல்ல நாளாகச் சென்றன. "பேசாத நாளெல்லாம் பிறவாநாளே." கப்பலில் நாங்கள் இருந்த ஓர் அறையில் ஒரு வடநாட்டார் இருந்தார். அவர் எங்களை மதிப்புக் குறைவாக நினைத்தார். எங்களைப் பற்றிப் பிறருக்குப் புகார் சொன்னார். நாங்கள் அவரை மரியாதையாக நடத்தினோம். அவர் மனம் மாறி எங்களுக்கு மிகமரியாதை செய்ய ஆரம்பித்தார். இம்மாறுதலுக்கு எங்கள் அன்புடன் எங்கள் பஜனையும் ஒரு காரணமாக இருக்கலாம். மரியாதையும் அன்பும் வீணாவதில்லையென்று கண்டோம்.

கப்பலில் உணவு மிக வசதி; கேட்டதெல்லாம் முடையில்லாமல் கொடுத்தனர். கப்பல் வேலைக்காரர்கள் பிரயாணிகளை மிக மரியாதையாக நடத்தினர். இரு திருத்தம் வேண்டும். அக்குறைகள் இந்த ஓட்டத்தில் மட்டும் இருந்திருக்கலாம். ஒன்று குளிக்க வெந்நீர் கிடைப்பது அருமையாக இருந்தது. சில நேரம் தண்ணீரும் குழாயில்

வராது. மற்ருென்று மலஜலம் கழிக்குமிடம் சுத்தம் செய்யக் கடல் தண்ணீர் வராது.

நாகப்பட்டினத்தில் ஒரு பகல் கப்பல் தங்கியது. நாள் முழுதும் மூட்டை இறக்கியும் முடியவில்லை. இரவில் பத்துமணிக்கு மேல்தான் கப்பல் நாகப்பட்டினத்தை விட்டது.

காலை விடிவதற்கு முன்னர்க் கப்பல் சென்னை சென்றது. ஆனல் கீழே இறங்க மணி பன்னிரண்டு. கஸ்டம்ஸைத் தாண்டப் பல மணிநேரம். தீர்வை அதிகாரிகள் மரியாதையாகவும் நியாயமாகவும் நடந்துகொள்கிருர்கள். அவர்களில் தலைவரான திரு. நாயுடு அநுபவமுள்ளவர். விட்டுக் கொடுக்காமல் பல உதவி செய்பவர். நாங்கள் வெளியில் போக மிக விரைவாக எங்கள் சோதனையை நடத்தச் செய்தனர்.

இறங்கியதும் சாமானைக் கொண்டு செல்வதைச் சிலர் கவனித்தனர். திரும்பக் கப்பல் டிக்கட் ஏற்பாடு செய்யச் செல்ல வேண்டிய திருந்தது; வடநாட்டு யாத்திரைக்கு ஏற்பாடு செய்ய வேண்டிய திருந்தது.

முதல் வரவேற்பு: அன்று மாலை கபாலீஸ்வரர் கோயிலில் கூட்டம். நான் டிக்கட் வேலைகளைக் கவனித்து ஒரு மணி நேரம் தாமதமாகச் சென்றதால் என்னைப் பார்க்க வந்த பலர் வீடு திரும்பிவிட்டனர். பிரார்த்தனை யாத்திரைக் கோஷ்டியினரால் குறித்த காலத்தில் தொடங்கியது. யான் சென்றதும் கூட்டம் ஆரம்பித்தது. சைவ சித்தாந்த மகா சமாஜ உதவிக் காரியதரிசி திரு. மா. ப. தியாகராஜன் அவர்கள் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். சித்தாந்தம் பத்திரிகையின் ஆசிரியர் திரு. முருகவேள் அவர்கள் தலைமை வகித்தார். ஆட்சிமொழித் தனி அலுவலர் திரு. கீ. இராமலிங்கம் அவர்களும், ஓதுவார் திரு. சிங்கார முதலியாரவர்களும் பேசினர். இவர் யாவரும் எனது பழைய நண்பர். தமிழிலே பயிலும் பிறமொழிச் சொற்களுக்குத் தனித் தமிழ்ப்பதம் கண்டு பிடிப்பதில் நிபுணர் திரு. இராமலிங்கம் அவர்கள். மயிலாப்பூர் கோயில் இருபது ஆண்டுகளுக்குமேல் நான் வணங்கிய கோயில். இறைவன் திருநாமம் கபாலி; அம்பிகை திருநாமம் கற்பகம். எனது

மூன்ருவது மகளுக்கு அத்தெய்வத்தின் பெயர். இவ்வூர் வள்ளுவரும் வாயிலா நாயனரும் அவதரித்த ஊர். திருஞானசம்பந்தர் பாடிய திருப்பதி; பூம்பாவை என்ற மாதரசி புத்துயிர் பெற்ற தலம். மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் மயிலாப்பூர் கோயிலுக்கு வந்த சமயம் ஒரு கூட்டம் நடந்தது. அதில் பிரார்த்தனைக் கூட்டத்தின் அவசியத்தைப் பற்றிப் பலர் பேசினர். அதில் பேசியவர்கள் திரு. கி. வா. ஜெகந்நாதன் அவர்கள், திரு. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், அருள்திரு. சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள். அவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க யானும் பிரார்த்தனையின் அவசியத்தைப் பற்றிப் பேசினேன். இந்தச் சமயம் மலேயாவில் நாங்கள் பிரார்த்தனை செய்யும் விதத்தையும் காட்டும் சந்தர்ப்பம் கிட்டியது. கோயிலில் எழுந்தருளியிருக்கும் ஆறுமுகப் பெருமான் எனக்கு வேண்டியவர். ஞானசம்பந்தர் பாடிய பதிகத்தின் முதல் பாட்டு :

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திரப் பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணுதே போதியோபூம் பாவாய்.

---

# திருக்கேதீச்சுர யாத்திரை நினைவுகள்

(திரு. கொ. நீ. சிங்காரவேலு, எம்.ஏ.)

நமது சமாஜ 55-ம் ஆண்டு விழாவை இந்தியத் துணைக் கண்டத்திற்கு அப்பாற்பட்ட நாட்டில் நடத்தத் தீர்மானித்தமை, நமக்குள் ஒரு பரபரப்பை உண்டுபண்ணியது. அதில் கலந்துகொள்ள வேண்டும் என்று நம்மில் பலர் தீர்மானித்தனர். ஆனல் நல்ல அனுபவங்களெல்லாம் எளிதில் கிட்டுவதில்லை. கடவு (Passport), நுழைவு (Visa), மருத்துவர் சீட்டு முதலிய யாவும் காலத்தில் பெற்றுக்கொண்டு 28-12-'60 தனுஷ்கோடி விரைவு வண்டிக்கு எழும்பூர் நிலையத்திற்கு வந்து சேர்ந்தவர்கள் சுமார் 60 பேர்கள் இருக்கும். பலர் மேற்குறித்த சீட்டுக்களைக் காலத்தில் பெற முடியாமல் நின்றனர்.

"நிற்பார் நிற்க நில்லா வுலகில் நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாம் திருமேனிப் புயங்கன் ஆள்வான் பொன்னடிக்
கற்பீர் எல்லாம் தாழாதே நிற்கும் பரிசே ஒருப்படுமின் [கே
பிற்பால் நின்று பேழ்கணித்தால் பெறுதற் கரியன் பெருமானே"

என நம் மாணிக்கவாசகப் பெருமான் பாடியதுபோல, நாங்களும் அவர்களையெல்லாம் வேறுவழி யின்மையிற் பிரியா விடைபெற்றுப் பிரிந்தோம்.

புகைவண்டி "ஹரஹர மகாதேவ" என்ற சிவநாம முழக்கத்துடன் இரவு 7-30 மணிக்கு எழும்பூர் நிலையத்தை விட்டுப் புறப்பட்டது.

இரண்டாம் வகுப்புப் பெட்டி முழுவதும், மூன்றும் வகுப்புப் பெட்டிகளில் பல இடங்களிலும் சமாஜ அன்பர்கள் நிறைந்தனர். சமாஜ ஆண்டு விழாத் தலைவர், சமாஜத் தலைவர், சமாஜத் துணைத் தலைவர் மூவரும் தூத்துக்குடி விரைவு வண்டியில் இரவு 9-30 மணிக்கு ஏறிக் குறுக்கு வழியாகச் சென்று திருச்சிராப்பள்ளியில் தனுஷ்கோடி விரைவு வண்டியில் கலந்து கொள்வதாகப் புறப்பட்டனர். தூத்துக்குடி வண்டி திருச்சிராப்பள்ளிக்குக் காலந்தாழ்த்து வந்தமையின் தனுஷ்கோடி விரைவு வண்டியைப் பிடிக்க முடியாமல்போயிற்று. தனி ஊர்தி வைத்துக்கொண்டு மண்டபத்தில் வந்து சேர்ந்தனர். இந்தக் கவலையை ஆண்டவன் எங்களுக்குத் திருச்சிராப்பள்ளியில் கொடுத்து மண்டபத்தில் விடுவித்தான். இடையிடையே வெய்யிலில் இருந்தால் தானே நிழலின் அருமை தெரிகிறது. இந்நிகழ்ச்சி வாழ்க்கையில் குறுக்கு வழிகளில் உள்ள இடையூறுகளையும் எடுத்துக் காட்டிற்று.

மண்டபத்தில் எங்களுக்கு ஒரு 'மண்டபப்படி'யும் ஆயிற்று. சமாஜ அன்பர் திரு. எ. இராமமூர்த்தி அவர்களால் சுவைமிகு சிற்றுண்டிவகைகள் அடங்கிய பொட்டலங்கள் வழங்கப்பட்டன. அவ்வன்னங்கள் சுவையில் ஒன்றை ஒன்று போட்டி போட்டாலும், எங்களுடன்வந்த சுவைஞர்கள் கற்கண்டுப் பொங்கலுக்குத்தான் முதற் பரிசு கொடுத்தார்கள். இவ்விருந்து திருக்கேதீசுவரத்தில் கிடைக்கப்போகும் (செவி) விருந்திற்கு முன்மாதிரியாகவும் நல்நிமித்தமாகவும் அமைந்தது. மற்றும் இவ்விருந்து, இக்

காலத்திலும் சிவநேசர்களுக்கு ஈத்துவக்கும் இன்பத்தை விழையும் அன்பர்கள் இருக்கின்றார்கள் என்பதை எடுத்துக் காட்டிற்று.

பிறகு மண்டபத்திலும், தனுஷ்கோடியிலும், தலைமன்னாரிலும் நடந்த கடவைச் சீட்டு, சுங்கம் முதலிய சோதனைகள் எங்களுக்கு ஆண்டவனால் அனுப்பப்பட்ட சோதனைகளாகவே இருந்தன. இவைகள் எங்கள் பொறுமையைச் சோதித்தன. இச்சோதனைகளில் தோற்றவர் சிலர் உண்டு. அவர்கள் நோய்த் தடுப்பு ஊசிகள் குத்திக் குறித்த கால அளவு ஆகவில்லை என்ற காரணத்தால் மண்டபத்தில் நிறுத்தப் பட்டனர். ஓரிரண்டு நாட்கள் சென்று திருக்கேதீச்சுரம் வந்து சேர்ந்தனர்.

திருக்கேதீச்சுரம் ஓர் அழகிய சிற்றூர். பாடல்பெற்ற தலம். ஊர் நடுவில் புதுப்பிக்கப்பட்ட அழகிய கோவில். அதைச்சுற்றி மாடவீதிகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் புதிதாகக் கட்டப்பட்ட சத்திரங்களும், மன்றங்களும், குருகுலங்களும் அமைந்துள்ளன. ஒருபுறம் பாலாவி ஆறு. மற்றொருபுறம் சிறிது தொலைவில் காட்சியளிக்கும் கடல். எங்கு நோக்கினும் பசுமையான செடிகளும் கொடிகளும் நிறைந்துள்ளன. சமய மாநாடு நடத்துவதற்கேற்ற அமைதியான நல்லசூழலில் திருக்கேதீச்சுரம் திகழ்கின்றது.

மூன்று நாட்கள் அவ்வழகிய சிற்றூர் புத்துயிர்பெற்று விளங்கிற்று. இலங்கையின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் குழுமிய மக்கள், பாலாவி ஆற்றில் நீராடுவதும் கோவிலில் வழிபடுவதும், மணிவாசக மன்றத்தில் நடக்கும் மாநாட்டுச் சொற்பொழிவுகளைக் கேட்பதும், இடையிடையே சொற்பொழிவு இல்லாதபோது இலங்கை அன்பர்களால் செவ்விதில் சமைக்கப்பெற்று அன்பொடும் அளைஇய அறுசுவை உணவை அருந்துவதுமாகக் காலங் கழித்தனர்.

சொற்பொழிவுகளில் ஒன்றிரண்டைக் குறிப்பிட விரும்புகிறேன். மாநாட்டுத் தலைவர் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிவைத்திருந்த தலைமை உரையை வாசிக்காமல், உணர்ச்சி ததும்பிய ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினர். அதன் சாரம், சைவர்கள் பரந்த நோக்கோடு பிற சமயங்களைத் தழுவிய சமரச சன்மார்க்க நெறியைக்

கடைப்பிடிக்க வேண்டும் என்பது. இதற்கு ஆதரவாகப் பல செய்யுட்களைச் சொல்லி,

“ யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர் ”

என்ற அடிகளையும் குறித்தார்.

மூன்றும் நாள் பேசிய இளைஞர் மாநாட்டுத் தலைவரும் நமது சமய நூல்கள் பல தெய்வங்களையும் அணைத்துச் செல்லும் தன்மையன என்று சொல்லி எடுத்துக்காட்டாக இவ்வடிகளைக் குறித்தார்.

இங்கே ஒரு எண்ணம் தோன்றுகிறது. திரு. அருணந்தி தேவ நாயனார் “யாதொரு தெய்வங் கொண்டீர் அத் தெய்வமாக ஆங்கே இறைவன் வருவர்” என்று பொதுப் படக் கூறாமல் “மாதொரு பாகனார் தாம் வருவர்” என்று கூறியதால் சமரச நோக்கிற்கும் ஒரு வரம்பு கட்டினது போலத் தோன்றுகிறது. மற்றும் இச்செய்யுள் முழுதும் நோக்குழி இது வைணவ தெய்வங்களைத் தீவிரமாகக் கண்டிக்கும் கருத்தொடு அமைந்திருக்கின்றதோ எனவும் சிலர்க்கு ஐயம் எழுகின்றது. முழுச் செய்யுள் பின்வருமாறு:—

“ யாதொரு தெய்வங் கொண்டீர்அத் தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார் தாம்வருவர் மற்றத் தெய்வங்கள்
வேதனைப் படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ்செய்யு
மாதலாலிவை யிலாதா னறிந்தருள் செய்வனன்றே ”

ஒருகால் இங்ஙனமும் இருத்தல் கூடும்! தெய்வங் கொள்கையில் எத்தகைய வேறுபட்ட கருத்துடையவர்களும், தாயையும் தந்தையையும் கண்கண்ட தெய்வமாகக் கொள்ளுதலில் வேறுபடாது ஒன்றுபடுவராதலின், மாதொரு பாகனாக விளங்கும் சிவபிரானே அவர்கள் அனைவரும் வணங்கத்தக்க சிறப்புடையவர் என்பதும், மைந்தர்கட்கு எத்திறத்தானும் அருள்புரியும் இயல்பினர் தந்தையும் தாயுமேயாவராதலின் அம்மையப்பராக விளங்கும் சிவபிரானே அவர்கள் அனைவர்க்கும் பொதுப்பட அருள் புரியவல்ல இயல்பினன் என்பதும் அருள்நந்தி தேவரின் ஆழ்ந்த கருத்துப்போலும்! அதுபற்றியே சிவபிரானுக்

குரிய வேறு பிற பெயர்களாற் குறிப்பிடாமல் ஈண்டுக் கருத்துடை யடைகொளி யணியாக "மாதொருபாகனர்" என்னும் பொருள் பொதிந்த சொற்றொடரைத் திறந் தெரிந்து வழங்கினர் போலும்! மேலும் 'தெய்வம்' என்னும் சொல்லுக்கும், 'இறைவன்' என்னும் சொல்லுக்கும் இடையே பொருள் வேறுபாடு பெரிதுண்டென்பதும் பிறவும் திருக்குறள் போன்ற நூல்களால் தெரிகின்றது.

இனி, திரு. கீ. இராமலிங்கனர் அவர்கள் பேச்சுக் குறிப்பிடத்தக்கது. "திருவெம்பாவை"யைப் புதியதொரு கண்கொண்டு பார்த்து அதன் நாடகப் பண்பைச் சுவை பெருகச் சொல்லி, அக்கூட்டத்தில் இருந்த ஆண் பெண் குழந்தை யாவரையும் இன்பவெள்ளத்தில் ஆழ்த்தினர்.

இங்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது. திருப்பாவை சிறு பெண் அருளியது. பெரும்பான்மை புற நிகழ்ச்சிகளைக் குறித்தவை. திருவெம்பாவை ஆண்டினுலும் அனுபவத்தினுலும் முதிர்ந்தவரால் பாடப்பெற்றது. பெரும்பான்மை அக நிகழ்ச்சிகளையும் சூக்கும தத்துவங்களையும் கொண்டது. உதாரணமாக மழையைப்பற்றிக் குறிக்கும் போது, ஆண்டாள் "தாழாதே சார்ங்கம் உதைத்த சர மழைபோல்" என்றும், மணிவாசகர் "முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய் மழையே" எனவும் கூறுகிறர்கள். ஆனல் பிரபந்தங்களின் உரையாசிரியர்கள் ஒவ்வொரு சொல்லுக்கும் நுண் பொருள் விளக்கங்களைக் கூறிப் பொருட்செறிவு உடையவைகளாகச் செய்கிறர்கள். இதனல் இலக்கியச் சுவை குன்றினுலும் பக்திச்சுவை அதிகமாகிறது. இதற்கு மாருகத் திருவெம்பாவையில் உள்ள நாடகப் பண்புகளைப் பெரிதும் போற்றின், அதன் இலக்கியச்சுவை பெருகினுலும் பக்திச்சுவை குன்றுமோ என்று அஞ்சுகிறேன். அல்லது திருவெம்பாவையின்கண் அமைந்துள்ள பலதிறச் சுவைகளையும் அவ்வத்துறையில் வல்ல அறிஞர்கள் விளக்கிவிட்டால், எவரெவர்க்கு எவ்வெச்சுவை விருப்பமோ அவரவர் அவ்வச் சுவைகளை நுகர வாய்ப்புண்டாகும் எனவும் கொள்ளலாம் போலும்!

விரிவஞ்சி மற்றைய சொற்பொழிவுகளை எடுத்துக் கூறவில்லை. மாநாடு முடிந்த மறுநாள் திருக்கேதீச்சுவரக்

கோவிலில் இங்கிலாந்திலிருந்து புதிதாகக் கொணர்ந் தமைத்த திருமணி ஒலிக்க, யாவரும் திருவாதிரை வழிபாடு செய்தோம்.

அன்று இரவு திருக்கேதீச்சுரத்தைவிட்டு நாங்கள் கொழும்புபோய்ச் சேர்ந்தோம். கொழும்பு ஒரு பெரிய அங்காடியாகவே எங்களுக்குக் காட்சியளித்தது. "கொடுப் போர் ஓதையும் கொள்வோர் ஓதையும் நடுக்கின்றி நிலை இய நாள் அங்காடி" என்று சொல்லலாம். அங்கு அல்லங் காடி இல்லை. ஏனென்றால் சரியாக மாலை 6 மணிக்குக் கடைகளை அடைத்து விடுகிறார்கள்.

கொழும்பிலிருந்து கடலோரமே பேர் உந்தூர்திமூலம் நெய்தல் நிலக் காட்சிகளையெல்லாம் பருகிக்கொண்டு கதிர் காமம் வந்து சேர்ந்தோம். கதிர்காம வேலன் காட்டுக் குள்ளே மாணிக்க கங்கை என்னும் ஆற்றங்கரையிலே இயற்கை அன்னையின் மடியிலே வீற்றிருக்கிறான். கோவில் சிறு கொட்டகையாக அமைந்திருக்கிறது. கோவிலில் இறைவனைத் திரையில் எழுதிய வேலனைக் கண்டுதான் வணங்கி அடையவேண்டும். சிங்களவர்தான் கோவில் அருச்சகராக அமர்ந்திருக்கிறார். அவ்வருச்சகர் சட்டையும் தலைப்பாகையும் அணிந்து, கைகளைக் கோணமாக நீட்டி ஏதோ மனத்தில் உச்சரிக்கிறார். அவ்வழிபாட்டு முறை நம் மனத்திற்கு மகிழ்ச்சியைத் தராவிட்டாலும், அருணகிரி நாதர் தமது திருப்புகழில் "வனமுறை வேடன் அருளியபூசை மகிழ்கதிர் காமம் உறைவோனே" என அருளிச்செய்திருத்த லால், ஒருகால் முருகனுக்கு மகிழ்ச்சி தரும்போலும் என ஒருவாறு எண்ணிக்கொண்டு ஆறுதல் அடைந்தோம். நாங்கள் எடுத்துக்கொண்டு போன திபாராதனைப் பொருள் கள் திரைக்குப் பின்னால் கொண்டுபோய் ஏற்பிப்புச்செய்து கொண்டுவரப்பட்டன. திரைக்குள் இருக்கும் முருகன் இன்ன தன்மையன் என்று எவர்க்கும் அறியொணாப் பொருளாகவே இருக்கிறான். நாங்கள் முருகப் பெருமா னின் இவ் வியத்தகு கோவிலைக் கண்டு இறும்பூது அடைந் தோம். சிலர் இக் கோவிலுக்கு நல்ல கோபுரங்கள் கட்ட வில்லையே என்று வருந்தினர். சிலர் திரைக்கு அப்பால் உள்ள பொருளைக் காட்டக்கூடாதா என்று வருந்தினர். இதெல்லாம் பொருளற்ற வருத்தம் என்றுதான் எனக்குத்

தோன்றியது. சூரியன் சந்திரனைப்போல் குளிர்ச்சியாக இருக்கக் கூடாதா அல்லது ஆற்றுநீர் ஓடாமல் இருந்த இடத்தில் இருக்கக் கூடாதா என்று கேட்பதுபோன்று பொருளற்றது. கதிர்காமத்தை அதற்கே உரிய பண்புகளோடு கண்டு வழிபட்டுப் பயனடைவதுதான் அறிவுடைமை. உண்மையிலேயே நம் மனத்தில் இருக்கும் திரை நீங்காதவரை எல்லாக் கோவில்களிலும் திரை விடப்பட்டுதான் இருக்கிறது. கதிர்காமத்தில் துணித்திரை; மற்றைய கோவில்களில் உலோகங்கள் முதலானவைகளாலான திரை.

கதிர்காமத்தைவிட்டுப் பேர் உந்து ஊர்திகளில் சிவபுராண முழக்கத்துடன் கண்டியை நோக்கி விரைந்தோம். வழியில் தேயிலை, ரப்பர், கோக்கோ தோட்டங்களையும் மற்ற மலைக் காட்சிகளையும் கண்டோம். கண்டியில் புகழோங்கியதொரு பௌத்தக் கோவிலைக் கண்டோம். அங்குப் புத்தருடைய பல் ஒன்றினை ஒரு பேழையுள் வைத்து வழிபடுகிறார்கள். அமைதியான கோவில். பௌத்தர்கள் முக்கரணங்களையும் அடக்கி மண்டியிட்டுத் தலை தரையில்படப் புத்தருக்கு வணக்கஞ்செய்யுங் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. எல்லாச் சமயங்களின் நடைமுறை அடிப்படையும் ஒன்றுதான் என்பதை அது எடுத்துக் காட்டிற்று.

கண்டியை விட்டு நாங்கள் கொழும்புவிற்குத் திரும்பி வந்து, அவரவர்கள் தேவைக்கும் மனத் துணிவிற்கும் ஏற்பப் பல பொருள்களை வாங்கிக்கொண்டு இந்தியா திரும்பினோம்.

---

# ‘சைவநெறி தான்பெற்ற புண்ணியக் கண் இரண்டு’

(சித்தாந்தக் கலைமணி - வித்துவான் -
சி. அருணை வடிவேலு முதலியார், காஞ்சிபுரம்)

“சைவநெறி தான்பெற்ற புண்ணியக் கண் இரண்டு” என்னும் இத் தொடர், சைவ சமய அருட்பேராசிரியர்களாகிய திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசரது பெருமை

களை விளக்கச் சேக்கிழார் பெருமான் அருளிச்செய்த தொடராகும். இஃது அவ்விரு பெருமக்களது பெருமைகளை யாவரும் நன்குணருமாறு இனிது விளக்கும்.

'இலக்கணை வகையால் சைவ சமயத்திற்குக் கைகால் முதலிய உறுப்புக்கள் இருப்பனவாகக் கொண்டால், திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அதற்கு இரு கண்களாவர்' என்பது இத் தொடரின் பொருள். ஒருவன் கை, கால் முதலிய பல உறுப்புக்களைப் பெற்றிருப்பினும் கண்ணைப்பெற்றே நடத்தல் வேண்டும்; அதுபோலச் 'சைவ சமயம் பிற ஆசிரியர்களைப் பெற்றிருப்பினும் இவ்விரு ஆசிரியரைப்பெற்றே நடைபெறுவதாகும்' என்பது இதன் கருத்து. இங்ஙனங் கூறிய இதனால், சைவ சமயம் இவ்விரு ஆசிரியரை இன்றியமையாமை இனிது விளங்கும்.

'சைவ சமயத்திற்கு ஆசிரியர் நால்வர் என்பது உலகறிந்த ஒன்றாய் இருக்க, இவ்விருவரையே இவ்வாறு இன்றியமையாதவராகக் கூறியது என்னை?' என்னும் வினா எழுதல் இயல்பு.

ஏனைச் சமயங்கட்கு அவற்றைப் புதியனவாகத் தோற்றுவித்தவரே ஆசிரியர்; சைவ சமயத்திற்கு அவ்வாறன்றித் தொன்மையாய் உள்ள அதனை இனிது விளங்கச் செய்தவரே ஆசிரியர். அவ்வாற்றால் சைவ சமயத்திற்கு ஆசிரியர் நால்வராயினும், அவருள் திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அதனை விளக்கிய வகை ஒரு தனிச்சிறப்புடையது. அஃதாவது; சைவ சமயம் முகிற்படலத்தான் மழுங்கி நிற்கும் ஞாயிறுபோலப் புறச் சமயங்களின் ஆரவாரப் பகட்டுரைகளால் மழுங்கி நின்ற காலத்து, அம் முகிற்படலத்தைச் சிதறியோடச்செய்து விளக்கும் பெருங் காற்றுப்போல, அவ்வாரவார உரைகளை வெற்றுரைகளாய் நீங்கச்செய்து விளக்கியதேயாம். இதனால், தோற்றம் அறியப்படாத தொல்பெரு நெறியாகிய சைவ சமயத்தை உயிர்ப்பித்து நிலைபெறச்செய்த பெருமை ஞான சம்பந்தருக்கும் நாவுக்கரசருக்குமே உரித்தென்பது தெளிவாகும்; இவ்வாறு சைவ சமயத்திற்குப் புத்துயிர்கொடுத்து நிலைப்பிக்கப் போந்தமையால் இவ்விருவரும் சைவ சமயத்தின் எல்லாப் பொருட் பகுதிகளையும் விளக்க வேண்டியவராயினர். ஆகவே, இவர்களது அருளிப்பாடுகள் பிறிதொரு

நூலே அவாவாது தந்நிறைவுடையனவாய் விளக்குகின்றன. இவ்விரு பெருங் காரணங்களால் இவ்விருவரே சைவ நெறிக்கு இன்றியமையாச் சிறப்புடைய ஆசிரியராதல் காண்க. இதுபற்றியே, மாணிக்கவாசகர் முற்பட்டவர் என்பது பழைமையாகச் சொல்லப்பட்டுவரினும், இவ்விருவருமே முதற்கண்வைத்து எண்ணப்படுவாராயினர் என்க.

இனி, மாணிக்கவாசகரும் புறச் சமயிகளை வென்றார் என்பது கூறப்படினும், அஃது ஓர் இடத்தில், ஒருபொழுது, பிற நாட்டினின்றும் பெருஞ் செருக்காற் போந்து வாதுக் கழைத்த புறச் சமயிகளை அவர் செருக்கு நீங்கித் தெளிவு பெறுமாறு வென்று நீக்கியதேயன்றி இவ்விருவரும், நாடு முழுதும் ஒன்றிரண்டு தலைமுறைகள் நன்றியில் நெறியில் அழுந்திக்கிடந்த நிலையை நீக்கி, அன்றுமுதல் இன்றுகாறும் அந்நெறிகள் மீண்டும் இவண் முளைத்தெழாது சைவ நன்னெறியே தழைத்தோங்கச் செய்தது போன்றதன்றாம்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்னும் இருவரது நிறைந்த ஆசிரியத் தன்மையின் சிறப்பினைச் சேக்கிழார் உரிய இடத்தில் இனிது எடுத்து விளக்கியுள்ளார். ஒரு காலத்தே, ஒரு நாட்டிலே (தமிழ் நாட்டிலே) வந்து இருவேறு தலங்களில் இருந்த அவ்விரு பெருமக்களும் ஓர் இடத்தில் கூடுகின்றார்கள். அஃதாவது திருநாவுக்கரசர் இறைவன் திருவருள்பெற்றுத் திருவதிகையில் திருத்தொண்டு செய்திருந்தவர், திருஞான சம்பந்தரது திருவருட்பேற்றின் சிறப்பினைக் கேள்வியுற்று அவரை வணங்க வேண்டும் என்னும் பேரவாவினால் சீர்காழிக்கு வருகின்றார்; திருஞானசம்பந்தரும் அவரது வருகையை யறிந்து அவரைக் காணவேண்டும் என்னும் பெருவிருப்பினால் எதிர் செல்கின்றார்; இருவர் பக்கத்தும் அடியார் குழாங்கள் வருகின்றன. இருபெருங் குழாங்களும் ஒன்று கூடிய காலத்து அக் குழாத்திடையே சென்று திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தரது திருவடிகளில் விழுந்து வணங்க, திருஞான சம்பந்தரும் அவரை எதிர்வணங்கித் தமது திருக்கைகளால் அவரது திருக்கைகளைப்பற்றி எடுத்து மீண்டும் வணங்கி, 'அப்பரே!' என ஆராக்காதல் ஆர்வமொழியால் அழைத்தார்; அதற்குத் திருநாவுக்கரசர், 'அடியேன்' என்று பணிவுரை பகர்ந்தார்; அடியவர் கூட்டம் 'அரகர'

என எழுப்பிய ஓசை உலகமுழுதும் நிறைந்தது. இவ்வாறு இருவரும் ஒருவர் ஒருவரிற் கலந்த உணர்வினராயினர். பின்னர் அவர்கள் தாங்கள் கூடிய கூட்டத்தின் பயனாக இறைவனை வணங்கச் சீர்காழித் திருக்கோயிலுக்குச் செல்கின்றார்கள். அங்ஙனம் செல்கின்ற காட்சியை விளக்குமிடத்தில் தான் சேக்கிழார் நாயனார் அதனை விளக்கியுள்ளார். அத் திருப்பாடல் வருமாறு :—

" அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும், ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்(டு)எனவும், புவனம் உய்ய
இருட்கடவுண் டவர்அருளும் உலகம் எல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவுங் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசும் சென்று
செஞ்சடைவா ணவர்கோயில் சேர்ந்தா ரன்றே "

திருத்தொண்டர் வரலாறுகளுள் இதைவிடச் சிறந்த உலகிற்கு உய்தியைத்தரும் வேறொரு நிகழ்ச்சியும், திருத்தொண்டர் புராணத்துள் இதைவிடச் சிறந்த உலகிற்கு உய்தியைத்தரும் வேறொரு திருப்பாடலும் இல்லை என்றே கூறலாம். திருத்தொண்டர் புராணமாகிய திருப்பாற்கடலுட் கடைந்தெடுத்து வைத்த அமிழ்தமாய் விளங்குவது இத்திருப்பாட்டு. இத்திருப்பாட்டால், முழுதுணரலாகாத அவ்வருட்பேராசிரியர் இருவர் தம் திருவருட்பெருமையைச் சேக்கிழார் நமக்கு முழுதுணரக் காட்டிவிட்டார் என்றே சொல்லுதல் வேண்டும். இதனுள் அவ்விரு பேராசிரியரது ஆசிரியத் தன்மையின் நிறைவு எங்ஙனம் விளக்கப்பட்டுள்ளது என்பதை நினைவோம்.

இத்திருப்பாட்டுள் சேக்கிழார், ஒவ்வொருவருக்கும் மூன்று மணிகளைப்போல மூன்று உவமைகளைக் கூறி, நாயக மணியாக "சைவநெறி தான் பெற்ற புண்ணியக்கண் இரண்டு" என்பதனை அமைத்துள்ளார். உவமையணியாக ஒவ்வோருவமையே கூறாது, பலபொருளுவமையணியாக, மும்மூன்றுவமை கூறியது எற்றுக்கு? என நாம் நோக்குதல் வேண்டும். வாளா புகழ்ந்துபோதல் கருத்தாயின் ஒவ்வோருவமையே கூறிப்போயிருப்பார்; அவ்வாறன்றி இங்கு அரியதொரு கருத்தை உலகிற்கு வெளியிடக்

கருதியதனாலேயே இவ்வாறு மும்மூன்றுவமை கூறினர். அக்கருத்து யாது? எனின், அதுதான், இவ்விருவரே உலகிற்கு நிறைநிலைத் திருவருட் பேராசிரியர் என்பது. அஃது இவ்வுவமைகளால் எவ்வாறு விளங்குகின்றது? என்பதை நோக்குவோம் :

மக்கட்கு ஆசிரியர் உணர்த்தற்பாலன உலகியலும், மெய்ந்நெறியும் என இரண்டு. அவற்றுள் உலகியலாவது உலகின்கண் வாழும் நெறி, அஃது, உலகத்தை ஆக்கவும், காக்கவும், அழிக்கவும் வல்ல முதல்வனாகிய இறைவன், நல்லது செய்தார்க்கு நலத்தையும், தீயது செய்தார்க்குத் தீங்கையும் தப்பாது தரும் அறவடிவினன் என உணர்ந் தொழுகுதல். இவ்வுணர்வு 'அறவுணர்வு' எனவும், அதன் வழியே நடத்தல் 'அறவொழுக்கம்' எனவும் கூறப்படும். இனி மெய்ந்நெறியாவது மெய்ப்பொருளை அடையும் நெறி. அது, பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருளை யடையுமாற்றை உணர்ந்தொழுகும் நெறி. இவ்வுணர்வு 'மெய்யுணர்வு' எனப்படும். அறவுணர்வு, ஆசிரியர் அருளுரை பற்றி யுணர்தலாகிய ஒருவகையே யுடையது; மெய்யுணர்வு அவ்வாறன்றி அருளுரையாகிய நூல்பற்றி யுணர்தலும், தம் அனுபவத்தான் உணர்தலும் என்னும் இருவகையினையுடையது; இவ்விருவகையுணர்வு களும் முறையே 'கலைஞானம், மெய்ஞ்ஞானம்' எனவும், 'அபரஞானம், பரஞானம்' எனவும் வழங்கப்படும். இங்ஙனங் கூறிய, 'அறவுணர்வு, கலைஞானம், மெய்ஞ் ஞானம்' என்னும் மூன்றனையும் உணர்த்தியவர் இவர் என்பது இங்குக் கூறிய மூன்றுவமைகளினும் முறையே அமைந்துள்ளன; அவற்றைப் பின்னர் இனிது விளங்கக் காணலாம். அறவுணர்வு முதலிய மூன்றனுள் ஒரோ வொன்றையே உணர்த்துவோரும் ஆசிரியரேயாயினும், மூன்றனையும் உணர்த்துவோரே முழுதுணர்த்தும் ஆசிரிய ராவர். அதனால், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும் திருநாவுக்கரசு நாயனாரும் மூன்றனையும் உணர்த்திய முழுநிலைப் பேராசிரியர் என்பது இவ்வுவமைகளால் விளங்குதல் காண்க.

அறவுணர்வு முதலிய மூன்றனையும் ஒருவரே உணர்த் தாது இருவர் உணர்த்த வேண்டுவது என்னை? அது

மிகையுமாம் அன்றோ? என ஐயம் நிகழ்தல் இயல்பே. அது பற்றியும் சிறிது நோக்குதல் வேண்டும்.

இங்குக் கூறிய அறம் முதலிய மூன்றனையும் ஒவ்வொரு நிலையிலே உணராது, இவ்விரண்டு நிலையிலேயே மக்கள் உணர்வர்; அதனால், அவற்றை அவ்வாறுணர்த்துதற்கு இருவர் ஆசிரியர் வேண்டப்பட்டனர் என்க. அவற்றின் இவ்விரண்டு நிலைகள் யாவை எனின், அறத்தின் இருநிலைகள் இல்லறம், துறவறம்; கலைஞானத்தின் இருநிலைகள் தொகுத்துரை, விரித்துரை; மெய்ஞ்ஞானத்தின் இருநிலைகள் அருள் விளக்கம், ஆனந்த விளக்கம். அருள் விளக்கமும் ஆனந்த விளக்கமும் முறையே சிவஞானபோதம் பத்துப் பதினொன்றும் சூத்திரத்துட் கூறப்பட்டன.

இல்லறம் அன்பையும், துறவறம் அருளையும் அடி நிலையாகக் கொண்டு நிகழ்வன என்பது நன்கறிந்த ஒன்று. அறத்தினை அந்நிலைகளில் உணர்த்தியவர் என்பதுணர்த்து தற்கு, அவற்றின் பெருக்கினை இவ்வாசிரியர்கட்கு உவமை யாக்கினர். இனிக் 'கண்' என்பது கல்வியைக் குறித்தல் வழக்கின்கண் பயின்றுவருவது; அதனால் அது நூலறிவைக் குறித்தது எனச் சுருங்கக்கூறினாராயினும் ஏனையவை போல, 'சைவநெறி தான் வலத்திற்பெற்ற கண்ணும் இடத்திற் பெற்ற கண்ணும் எனவும்' என்றுரைத்தல் ஆசிரியர் கருத்தென்க. சில சொற்களால் ஆணைமாத்திரை யால் தொகுத்துக் கூறுதல் நுண்ணுணர்வினோர்க்கும், பல சொற்களால் நடை முறை வகையில் இனிது விளங்குமாறு விரித்துக்கூறுதல் ஏனையோர்க்கும் ஆதலின், வலக்கண், இடக்கண் என்பன அத்தகைய உரைகளைக் குறிக்கும். இனி இறைவன் உலகத்தை நோக்காது தன்னிலையின் நிற்குமிடத்துச் 'சிவம்' எனவும், உலகை நோக்கி அதனைத் தொழிற்படுத்தக் கருதுமிடத்துச் 'சத்தி' எனவும், சொல்லப்படுவனாகலின், 'இறைவியின் அருள்' என்றது அருள் விளக்கத்தினையும், 'இறைவன் அருள்' என்றது ஆனந்த விளக்கத்தினையும் குறிப்பனவாதல் அறிக.

இவ்வுவமைகட்கு இத்தகைய விளக்கத்தைக் கண்டவர்கள் காஞ்சிபுரம், சித்தாந்த ஞானபானு, உயர்திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்களாவார்கள். (தொடரும்)

---

சமாஜச் செயற்குழுக் கூட்டம் : 19-3-61 ஞாயிறு காலை 10-மணிக்குக் கூடும். கட்டிட டிரஸ்ட், மலேயாவில் சமாஜ விழா, புத்தகக் கணக்கு முதலியவைபற்றி ஆலோசிக்கப் படும். செயற்குழு உறுப்பினர் வருமாறு கேட்டுக்கொள் ளப்படுகிறது. 1961 எப்ரல் மாதம் முதல் ஒவ்வொரு ஆங் கில மாதமும் கடைசி ஞாயிற்றுக்கிழமை காலை 10-மணிக் குச் சமாஜச் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். உறுப் பினர் அந்த நாளை வேறு அலுவல்களின்றிச் செயற்குழுக் கூட்டத்திற்கு வருவதற்காக ஒதுக்கி வைக்கும்படி கேட் டுக் கொள்ளப்படுகின்றனர்.

நாயன்மார் திருநட்சத்திர விழா :—கீழ்க் காணும் நாட் களில், மாலை 5-30 மணிக்குத் திருவான்மியூர் ஸ்ரீ மருந் தீசுவரர் கோயிலில் நாயன்மார்களின் திருநட்சத்திர விழா நடைபெறும். அவ்வமயம் திரு. ஆர். விசுவநாத அய்யர், எம்.ஏ. அவர்களாலும், மற்றும் அறிஞர்களாலும் நாயன் மார்களின் புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறும். அன்பர்கள் பலர் அவற்றில் கலந்துகொண்டு இறைவன் திருவருளைப் பெறுமாறு வேண்டுகின்றேன்.

மாசி மாதம்

| | | | | |
|---|---|---|---|---|
| 29௳ | பூராடம் | ஞாயிறு | 12-3-61 | காரிநாயனார் |

பங்குனி மாதம்

| | | | | |
|---|---|---|---|---|
| 9௳ | உரோகிணி | புதன் | 22-3-61 | நேசநாயனார் |
| 11௳ | திருவாதிரை | வெள்ளி | 24-3-61 | கணநாதர் |
| 13௳ | பூசம் | ஞாயிறு | 26-3-61 | முனையடுவார் |
| 21௳ | சுவாதி | திங்கள் | 3-4-61 | காரைக்காலம்மையார் |
| 30௳ | சதயம் | புதன் | 12-4-61 | தண்டியடிகள் |

—ஜி. கலியாணம், செயலர்.

---

## "சித்தாந்தம்"—மாத வெளியீடு

சமாஜ அங்கத்தினர்களுக்கு வழங்கப்படுவது.

அங்கத்தினர் ஆண்டுக் கட்டணம் ரூ. 3/-

**சைவ சித்தாந்த மகா சமாஜம்,**

14, வாரன்சாலை, மயிலாப்பூர், சென்னை-4

*Statement about ownership and other particulars about*

# "SIDDHANTHAM"

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | ... | 14, Warren Road, Madras-4 |
| 2. Periodicity of its Publication | ... | Monthly |
| 3. Printer's name | ... | D. Mangayarkarasi & V. K. Punithavathi |
| Nationality | ... | Indian |
| Address | ... | 15, Madhavaperumal Koil St., Mylapore, Madras-4 |
| 4. Publisher's Name | ... | S. Satchidanandam Pillai |
| Nationality | ... | Indian |
| Address | ... | 175-A, Lloyds Road, Madras-14 |
| 5. Editor's Name | ... | Pulavar Murugavel, M.A., M.O.L. |
| Nationality | ... | Indian |
| Address | ... | 73, Kothavalchavadi Street, Saidapet, Madras-15 |
| 6. Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | | "Saiva Siddhanta Mahasamajam" with no shareholders or partners, but only members paying subscriptions. ["Siddhantham" is not a newspaper.] |

I, S. Satchidanandam Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Signature of Publisher: (Sd.) S. Satchidanandam Pillai.
Dated, 10—3—'61.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.